

உ

குருவே துணை.

முருகனே முன்னிற்க

கந்தன்

# சித்திர பந்தன மாலை.

இஃது

கோயமுத்தூர் தாலூக்கா செட்டிபாளையம்

திருவாளர். ரா. நஞ்சப்ப கவுண்டர்

குமாரர்

**R. N. கல்யாண சுந்தர கவுண்டரால்,**

இயற்றப்பெற்றது.



இதன் விலை] 1932

உ

குருவே துணை.

முருகனே முன்னிற்க

# கந்தன் சித்திர பந்தன மாலையும்,

படைவீடாறுக்கும்

முற்றுமோனையமக வெண்பாவும்

இஃது

கோயமுத்தூர் தாலூக்கா செட்டிபாளையம்

திருவாளர். ரா. நஞ்சப்ப கவுண்டர்

குமாரர்

R. N. கல்யாண சுந்தர கவுண்டரால்,

இயற்றப்பெற்று

கோயமுத்தூர் சத்திவடிவேல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1932.

இதன் விலை] [அணா. 8.



R. N. கல்யாணசுந்தர கவுண்டர்,
செட்டிபாளையம்.



உ

வெற்றிவேலுற்ற துணை.

குருவே துணை.

# முகவுரை.

கந்தன் சித்திர பந்தன மாலை எனப் பெயர் பெற்ற இந் நூல் சிவபெருமான் றிருக்கண்டைப்பொறி சரவணத்தாறு தனை யர்களாக அம்பிகை தன்னால் அணைக்கப் பட்டு ஆறுமுகமு மாறிருபுயமும் ஒரு திருவுருவத்தோடமுதண்ட கந்தப்பெரு மானுக்குகந்த சித்திரங்களாற் பந்திக்கப்பட்டு அணிபெறத் தொடுத்த அலங்கல் போல முப்பது பிரிவுகளைக்கொண்ட பல திறத்தயாப்பினு லாக்கப்பட்டமையின் மாலையெனப் பெயர் பெற்றுக் காரணக்குறியாய்ப் பிரபந்தத்தின் மேற்றாயிற்று.

இந்நூலை கோயமுத்தூர்த் தாலூக்கா செட்டிபாளையம் திருவாளர். ரா. நஞ்சப்ப கவுண்டர் குமாரன் R N கல்யாண சுந்தரமாகிய அடியனால் கலியுகம். 5030-வது ஸ்ரீ விப்வ ஆண்டு வைகாசித் திங்களில் ஆறுமுகன் அடியிணையினின் றாகி த்த ஆணையின்றோற்றத்தைக் கொண்டும் தண்டியலங்காரம் மாறனலங்காரம் என்ற இலக்கணங்களைக்கொண்டும் ஆக்கப் படுங்கால் அடைந்த அல்லல்கள் அளவிலடங்கா.

கந்தப்பெருமான்கருணை பால் யாத்துக்கொண்டிருக்கும் போது பலர் பார்த்துப் புகழ்ந்தும், சிலர் பார்த்து இழந்தும் கூறியதால் அடியன் மனம் திகைப்புற்றது அக்காலையில்,

பொடியணிந்தெழில் பொங்குறு மெங்குக
னடியர் தங்க ளகத்திற் றுயரினை
யுடையிழுந்த வொருவன் கரமெனக்
கடிதடைந்து களைந்தருள் செய்யுமால்

என்ற உண்மையை யுணர்த்துவான் வேண்டி

வீடு விரும்பி வெறுத்திலன் மெய்யைத்
தாடரு மொண்குர வன்றனை யெங்கு
நாடி யுழன்றில னுய வென்னைத்
தேடி யடைந்தருள் செய்தனை..........

என்றாற்போல் அன்பிற்குகந்த கந்தனொருனட் கனவிற்றோன்றி அஞ்சலியளித்துப் பாததாமரை தந்த பலத்தால் உள்ளந்தேறி அதுவே அடியாகக்கொண்டு "பாததாமரை தந்தனையே குகா" என்ற (முரச பந்தனம்) மேலும் ஒருவாறு முடித்தனன்.

ஒப்பற்ற இருப்புகழுற்ற முத்தமிழில் நாற்கவியில் ஐந்திலக்கணத்தில் ஒருங்கு மிறைக்கவியெனுஞ் சித்திரக்கவி இக்காலத்தில் மிக்காரிடையன்றி யருகி வருவதால் பார்த்தோர் யாவரும் பயனுரும் வண்ணம் அததற்குள்ள அரும்பதக்குறிப்பும், பதவுரையும், துறைவக்குறிப்புஞ் சேர்த்துப் பதிப்பான்றுணிந்தனன்.

இது சித்திரக்கவிகளாகையால் சிற்சில வழுக்கள் கற்றோரறிவிற் கிட்டினுங் கிட்டும்,

குற்றங் களைந்து குறைவற வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

செட்டிபாளையம்,
விபவ-ஆண்டு
வைகாசித் திங்கள்.

R. N. கல்யாண சுந்தரம்,
முருகனடித்தொண்டன்.

முருகன் துணை.

# பாயிரம்.

---

இஃது
மதுரைத்தமிழ்ச் சங்கவித்துவானும்,
கும்பகோணம். அரசியலார் கல்லூரித் தமிழாசிரியரு
மான திருவாளர்.
√அ. கந்தசாமிப்பிள்ளை யவர்கள்
இயற்றிய சாத்துக்கவிகள்.

எழுசீர்க்கழில் நெடிலடியாசிரிய விருத்தம்.

மன்பதை யுலகிற் பைந்தமிழ்க் கல்வி
வாய்ப்பதோ வரியதா மதனி
னின்சுவைக் கவிகள் விழுப்பொருள் பயக்க
வியற்றுவ தனைத்து மரிதலால்
வன்புறு மதனிற் சில்வகை யெழுத்து
மடங்கியே பலமொழி யாக
முன்புறப் புகுத்திச் சித்திரக் கவிதான்
மொழிவதே யரிதரி தம்மா. 1

செந்தமிழ் மாபா டியந்தருந் துறைசைச்
சீர்சிவ ஞானமா முனிவர்
எந்தைமீ னாக்ஷிச் சுந்தர னென்னு
மிணையரும் பெருங்கவிப் புலவர்
தந்தபே ருதவிக் கெதிர்செய்கை மாறும்
தரணியி லாதுகொல் சாற்றின்
அந்தகன் முறையே கொண்டவிந் நூலி
லமைபரி சியப்புகற் கெளிதோ 2

கொங்குமண்டலத்தின் றென்வரைப்பாண்
குலாவுவை காவூர்நா டதனில்
திங்கடோய் குவட்டுப் பொதியையங் குன்றிற்
சேவலங் கொடிக்காத் தவர்க்கு
மங்கல மாதிப் பல்வகை யியலும்
வாய்தரக் குயுற்றுபு தொடுத்துப்
பொங்குசித் திரப்பந் தனமணி மாலை
புனைந்தணிந் திட்டனன் மாதோ. 3

வண்டின முராலுஞ் செங்கழு நீர்த்தார்
வனைந்த நஞ்சப்பவேள் மைந்தன்
அண்டினர்க் களிக்கும் வணிகமா புரியான்
அறுமுகற் பணிந்திடு மன்பன்
தண்டமிழ்த் துறையே பொழுதுபோக் காகத்
தானுணர் நுண்ணறி வாளன்
மண்டுகைத் தொழிலும் வல்லவ னன்பு
வாய்மையா தியகுண மணிவான் 4

என்னையாள் பேரை யிறைவர்நல் விழாவி
லிணையில்மண் டபப்படி புரிவோன்
அன்னையா யொருமா ணவர்தமிழ்ச் சங்க
மமைத்தனு தினம்புரந் திடுவோன்
பன்னுறு மிசையின் வழாதுதே வாரப்
பாடசா லையும்நடத் திடுவோன்
பொன்னென "நான்கு பிறப்பர்நாடெ" ன்னும்
புதுமுறை நூல்புகன் றிட்டோன். 5

இருபெருஞ் செல்வ மோங்குறப் பெற்றோ
னின்சொலில் வன்செயன் முடிப்போன்
பருவுபல் கலைதேர் செந்தமிழ் வாணர்
வழுத்திடும் பேருப காரி
அருமைசால் நண்பிற் கணிகல மாகி
யமர்தரும் பெருந்தகை யாளன்
தருநிகர் கொடைக்கல் யாணசுந் தரனும்
தகும்பெயர் விளங்குகண் ணியனே 6

## வெண்பா.

வைகாவூர் மாயூரா வந்தருளெந் தம்மையென
வைகாவூர் வேலோன் மலரடிக்குச்—செய்தணிந்தான்
பந்தனவி சித்ரசித்ரப் பாமாலை கல்யாண
சுந்தரனுங் கங்கை சுதன். 7

குறிப்பு:—ஊர் மயூரா! வந்து அருள்வை. எந்தம்மைக்கா. என
அணிந்தான். எனக்கூட்டுக.

---

## முருகன் துணை.

## கும்பகோணம். வாணுத்துறை ஹைஸ்கூல்
## தலைமைத் தமிழாசிரியர்
## திருவாளர். T. V. சதாசிவ பண்டாரத்தாரவர்கள்
## இயற்றிய சாத்துக்கவிகள்.

## வெண்பா.

குன்றமெறிந்த குமரற்குச் சித்திரப்பா
துன்று மொருமாலை சொற்றனனால் — என்றுமிவன்
கல்விவலார் பாராட்டுங் கல்யாண சுந்தரப்பேர்
நல்வித்த கக்குரிசில் நன்கு 1

## அறுசீர் விருத்தம்.

ஓங்கலிடை வீற்றிருக்கு முயர்குமரன்
திருவடியை யுவந்து வாழ்த்திப்
பாங்குறுநற் சித்திரஞ்சேர் பாமாலை
யினிதுறைத்துப் பாரி லென்றுந்
தேங்குபுக ழெய்தினனால் செட்டிபா
ளயப்பதியிற் சிறக்க வாழ்வோன்
ஓங்குபெருந் திருவாளன் கல்யாண
சுந்தரப் பேருபர்கோ மானே. 2

---

முருகன் துணை.
இஃது
திருச்சிராப்பள்ளி பிஷப்ஹீபர் கலாசாலைத்
தலைமைத் தமிழாசிரியர் திருவாளர்.
பண்டித. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்
இயற்றிய சாத்துக்கவிகள்.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

கண்கண்ட தெய்வ மெனக் காசினியோ
ரனைவர்களுங் கருதி யேத்தி
எண்கொண்ட வரங்களெலாம் பெறவருளுங்
கந்தவே ளெழிற்பொற் றாட்குப்
பண்கொண்ட செந்தமிழிற் சித்திரபந்
தனமாலை பன்னி வேய்ந்தான்
விண்கொண்ட புகழ்க்கொங்கு நாடதனிற்
செட்டிபாளயப் பேர் மேவும் 1

நற்பதிவாழ் வோன்பயில நவின்றோறு
நானயம்போ லின்ப நல்கும்
அற்புடைய னருள்சாந்த மாதியநற்
குணங்களெலா மமையப் பெற்றோ
பொற்பமருங் கொங்குவேண் முதுகுடியிற்
புதியபுகழ் பூக்க நின்றோன்
சொற்பொலியும் விற்பனமார் கல்யாண
சுந்தரனுந் தோன்ற றானே. 2

---



இஃது

சிரவணபுரம் கௌமாரமடாலயம் சதுர்வேத
சித்தாந்த சண்மத சமயாதீத அத்துவித கௌமார
சபைத்தலைவர் ஸ்ரீலஸ்ரீ கந்தசாமி சுவாமிகள்
இயற்றிய பதும பந்தனம் வெண்பா.

மாகனக போகசுக மாகநக ராகமிக
மாகரவே லுய்த்தோன் மகிழ்ந்துபுனை — பாகமே
தக்கல்யா ணச்சுந்த ரன்சித்தி ரப்பாக்கண்
மிக்கவமிழ் தைப்போலு மே.

முருகன் துணை.

இஃது

திருவாமத்தூர் கௌமாரமடாலயம் சந்தச்சரபம்
ஸ்ரீலஸ்ரீ. முருகதாசசுவாமிகள் திருப்புகழ் சுவாமிகள்
என வழங்கும் தண்டபாணி சுவாமிகள் குமாரர்
ஸ்ரீ. தி. மு. செந்திநாயகம் பிள்ளை அவர்கள்
இயற்றிய சாத்துக்கவிகள்.

## அறுசீர் விருத்தம்.

சுபகரஞ்சேர் கொங்குவள நாட்டில்வளம்
பொலிபலவூர் துலங்கு மேனுந்
தபனனெனச் சிறந்தபுகழ்ச் செட்டிபா
ளயமெனும்பேர் தழைத்த வூரி
லுபரிநலம் பொலியுளவுத் தொழில்வழிநாற்
பயன்களுங்கொ ளுயர்வே ளாளன்
செபதவமா தியபுரிந்து தெய்வவழி
பாடுபுரி கிரத்தி னனே. 1

நஞ்சப்ப னெனுமுரிமைத் தந்தைதவப்
பயனாகி நயந்தோன் பொல்லா
ரஞ்சப்பல் லுயிர்வதைத்தூ னருந்துநவை
யெனநூல்செய் யருள்சேர் தூய
நெஞ்சப்பண் புடையனுயர் கலியாண
சுந்தரப்பேர் நிலவக் கொண்டோன்
வஞ்சப்பன் னெறிதோறு மருவலொரு
தேவெனத்தேர் வளமை யானே. 2

அத்தேவு சண்முகத்துக் குகனேயென்
றருங்கவிநூ லனந்தஞ் சொல்வோன்
சித்தேறத் தருமவன்சீர் சித்திரப்பா
மூப்பதினாற் சிறக்க வோதிச்
சத்தேறுந் தமிழ்ப்புலவ ரதிவியப்புற்
றனந்தந் தழையச் செய்தான்
புத்தேளிருலகினுள புத்தமுது
மிதைநினைக்கிற் புன்மைத் தாமே. 3

# பவானி போர்டு உயர்தரப் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதரும், கந்தப்புராணப் பிரசங்க வித்துவானுமாகிய திருவாளர், குமாரசாமிப் பிள்ளையவர்கள் இயற்றிய சாத்துக்கவி.

## எழுசீர்க்கழில் நெடிலடியாசிரிய விருத்தம்.

சித்திரக் கலாப மயின்மிசை யமருஞ்
சிவகுகப் பரமன்று ளதனிற்
சித்திரக் கலாபந் தருமிது போன்ற
செய்யுள்வே றிலதென நயவிச்
சித்திரக் கலாவும் பயன்றரு மினிய
செட்டிமா நகர்வெளாண் செம்மல்
சித்திரக் கலாபற் செய்யுண்மா லையைச்செய்
தனன்கலி யாணசுந் தரனே 1

---

குறிப்பு:- சித்திரக் கலாப மயில்,
சித்து இரக்க லாபம்.
விசித்திரக் கல் ஆவும்.
சித்திரங் கலாவும் பல்.

---

## முருகன் துணை.

## ஓர் அன்பன் இயற்றிய சாத்துக்கவி.

### அறுசீரடி.

பந்தனத்தை யேற்றதனப் பாரநடை
வள்ளியணை பதிக்குச் சித்ர
பந்தனத்தை யேற்றகவி மாலையதாற்
பாடிமிகப் பணிந்தான் புண்ய
பந்தனத்தை யேற்றவிந்தச் செனனமுறு
பயனிதெனப் பாரோ ருக்கோர்ப்
பந்தனத்தை யேற்றகலி யாணசுந்
தரனென்னும் பாவல் லோனே. 1

குறிப்பு:- 1 பந்து, அன்னத்தை, ஏற்ற தனமும், நடையும்.
2. சித்திர பந்தனம்.
3 புண்ணிய பந்தனர்—புண்ணிய மிகுதி.
4. ஏரன், பந்தனம்—ஏர் பூணுதலையுடைய.

---

முருகன் துணை.

இஃது

## உடுமலைப்பேட்டை தமிழ்வித்துவான் "கர்ணாமிர்தம்" திருவாளர். வெ. ரா. கந்தசாமி பிள்ளை அவர்கள் இயற்றிய சாத்துக்கவிகள்.

### அறுசீராசிரியம்.

திருவருளின் றிறத்தாலுஞ் சேர்ந்தனருட்
 பொலிவாலுஞ் சேர்ந்த ஞானந்
தருமறிவு விரிவுரைசொ லாகமநூ
 லிவையுணர்ந்த தக்க யூகன்
வருதமிழில் நாற்கவியுஞ் சொல்வல்லான்
 வணிகநகர் வளர்வே ளாண்மை
தருசெயலி லுவகையுளான் கலியாண
 சுந்தரனந் தமியன் யாதோ. 1

பாவலர்பா லாவலுளான் பாவியர்பா
 லாவலிலான் பரங்குன் றேருஞ்
சேவலர்பா லன்புடையான் றீவினைபால்
 வன்புடையான் சிறப்பின் மிக்க
ஓவியமார் பந்தனமா லைகடம்பர்
 சந்தனமா ருரத்தி னோகை
தாவருசீர்ப் பெரியோரின் தண்ணளிக்கே
 உரியோனைச் சாற்றி னேனே. 2

முருகன் துணை.

இஃது

கொச்சி சமஸ்த்தானம் சித்தூர்த் தாலூக்கா நல்லேப்பள்ளி தமிழ்வித்துவான் திருவாளர். சுப்பைய உபாத்தியாயர் குமாரரும், தமிழ் பண்டிதருமான கோ. தா. அப்பாச்சிக்கவுண்டன்பதி திருவாளர். சு. ஆறுமுகம் பிள்ளை அவர்களியற்றிய சாத்துக்கவிகள்.

அறுசீர்கழில் நெடிலடி ஆசிரியம்.

சித்திரவேல் வரைபிளக்கச் செலுத்தியவேள்
பவமறுக்குஞ் செய்ய தாளை
சித்திரவு பகன்மரவாச் சிந்தையெழு
மன்புவழிச் செய்தான் முப்பான்
சித்திரபந் தனக்கவிதை திசைப்புலவர்
நல்விருந்தாத் திகழு நீழ்வி
சித்திரமா ளிகைவீதிச் செட்டிபா
ளயத்திலுறை திருவின் மேலான். 1

புவியேத்தும் பான்மவுலிப் புகழ்க் கங்கை
குலத்துதித்தோன் புரைதீர் கேள்வித்
தவவாய்மை நஞ்சப்பத் தகையாளன்
றருபுதல்வன் றலைப்பில் வேள்வி
யவிநேர்ந்திங் கியற்றலினுங் கொலைமறுத்த
னலமெனவோ ரறநூ ஜெல்லோர்
கவியொடு முன்வகுத்தோன் கலியாண
சுந்தரப்பேர்க் கலைவல் லோனே. 2

முருகன் துணை.

இஃது

## கணபதி திருவாளர். இராமசாமிக்கவுண்டர் குமாரரும், இந்நூலாசிரியர் மைத்துனரும், வேளாள வாலிபன் பத்திரிகாசிரியருமாகிய திரு. பண்டிதர். ரா. கிருஷ்ணசாமிக் கவுண்டர் அவர்களியற்றிய சாற்றுக்கவிகள்.

### அறுசீர்க்கழில் நெடிலடி ஆசிரிய விருத்தம்.

சீர்பூத்த மதுவூக்து மகாந்தஞ்
செறிபொழிலின் செல்வமார்ந்த
பார்பூத்த தெனப்பூத்த வணிகநகர்
பரவிநெற்றவத் தால்வந்தோன்
கார்பூத்த கறைபூத்த களத்தனையே
கருதிநெஞ் சப்ப னென்னும்
பேர்பூத்த வேர்பூத்தோன் சுதன்கல்யா
ணச்சுந்த ரேந்தல் பேசும்.

### சந்த விருத்தம்.

கந்தன் சித்திர பந்தனமாலை கட்டிய திறமிதுபோல்
முந்தெங் கும்மினி தாயதொர் நூலைக் கண்டில முதலிதுவே
வந்தெங் கும்நம தாருளமேவி மன்னிய தாலிதனின்
அந்தம்பேசுத லாதவன் றெம்மா லாவதன் றெவராலும்.

### கட்டளைக் கலித்துறை.

ஓவியங் கற்றிது போன்றதோர் நூலை யுலகினிலே
பாவியங் கற்ற கவிவாணர் பாடுந் திறமறியேம்
ஆவியங் கற்றுகச் சூரனை யாக்கிய வண்ணறன்மேல்
காவியங் கற்றவெ னத்தான்செய் தான்சித் திரகவியே.

முருகன் துணை.

இஃது

கோயமுத்தூர் உயர் திருவாளர் வித்துவான் கந்தசாமி முதலியாரவர்களின் குமாரரும், கோயமுத்தூர் அரசியலார் கல்லூரித் தமிழாசிரியர் திருவாளர். ச. திருச்சிற்றம்பலம்பிள்ளையவர்களின் மாணாக்கரும், கோயமுத்தூர் வழக்கறிஞரும் ஆகிய உயர் திருவாளர். C. K. சுப்பிரமணிய முதலியார் B. A, F, M, U. அவர்கள் இயற்றிய சாற்றுக்கவி.

அறுசீர் விருத்தம்.

கந்தன்மேற் சித்திரத்தின் பந்தனமா
மாலைதனைக் கவினிற் சாத்திச்
சந்தமார் நற்பயன்கள் வேணவெலா
மீண்டடைந்தான் தகைமை சான்ற
செந்தமிழ்வல் லோர்க்கிடமாஞ் செட்டிபா
ளயநகரிற் சிறக்க வாழ்வோன்
முந்தைமர பொழுக்கமிகு கல்யாண
சுந்தரனு மொழிவல் லோனே.

---

இஃது செட்டிபாளையம் திருவாளர். பொ. வெங்கிடாசலக் கவுண்டர் குமாரரும், இந்நூலாசிரியர் மைத்துனருமாகிய திருமிகு. V. குப்புசாமிக் கவுண்டரவர்களாலியற்றிய

சாற்றுக்கவி.

சீலக் கலியாண சுந்தரப்பேர்ச் செந்திருவோன்
வேலக் கரத்துகற்கு வேண்டியே — தாலமிசைப்
பந்தனத்திற் சித்திரப்பாப் பாலமிழ்தைப் போலவே
தந்தனனெ னத்தானே தான்.

---



## சங்க பந்தனம்.

இஃது செட்டிபாளையம் திருவாளர். சுப்பருமையர் குமாரரும், இந் நூலாசிரியரிடம் தமிழ்க்கல்வி பயின்றவரும், கிரியாகுருவுமான திருமிகு. ரகுநாதையரவர்களியற்றிய சாற்றுக்கவி.

தேவற்குத் துன்பத்தைத் தீர்த்தசத்தி வேலவன்மீ
தேவைத்த பக்தி திகழ்ந்தோங்கப் — பாவொத்த
வித்தாரன் கல்யாண சுந்தரனு மேலோன் செய்
சித்திரப்பா மெத்தசிறந் தே.

முருகன் துணை.

இஃது

மதுரைச் செந்தமிழ்ச் சங்கத்தின் அங்கத்தினருள் ஒருவரும், கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் அங்கத்தினருள் ஒருவரும், விபூதி விளக்கம், நித்திய கரும விளக்கம், மகேசுரபூசை விளக்கம், இங்கித மணவியல் முதலிய ஒழுக்கநூல்களின் ஆசிரியருமான திருவாளர். துடிசைக்கிழார் அ. சிதம்பரனாரவர்களியற்றிய சாற்றுக்கவி.

நேரிசை வெண்பா.

எத்திற வாணர்களு மேத்தும் பெருமையதாய்
சித்திரச் செய்யுள்பல செப்பினான் — முத்தமிழ்தேர்
செட்டியெனும் பாளையத்தான் செல்வன் †மணவழகு
¶செட்டி திருவடிக்கே தான்.

---

முருகன் துணை.

இஃது

கோ. தா. செட்டிபாளையம் திருவாளர். அ. ஷண்முகம் செட்டியார் குமாரர் ஜோதிட வைத்தியம். திருவாளர், மருதப்ப செட்டியார் அவர்களியற்றிய

# சிறப்புப் பாயிரம்.

—*—

நிலைமண்டில ஆசிரியப்பா.

இசையருளிறையவன் மிசையருளிசைபெற
கம்மசெல்லாண்டி யம்மன்பதிகமு
மூற்றநால்வகைத் தோற்றத்தார்க
ணல்மகாநாடல் லதுகொலைமறுத்தலும்

---

†மணவழகு — கல்யாண சுந்தரம்.

¶செட்டி — சுப்பிரமணியர்.

அந்தமுற்றிலங்குஞ் செந்தமிழ்மாணவர்
சங்கமியற்றியுங் கங்கையீன்றறுமுகக்
கந்தன்சித்திர பந்தனமாலையென்
றுக்கியம்விளங்கப் பாக்கியத்தொழும்பர்
கொண்டருத்ராக்க கண்டிகாபந்தனம்
நாகநாலிரட்டை நாகபெண்ணுகமு
மேகசதுர பாகவிரதமு
மிருநான்காறு மிருநான்காரை
மருவாஞ்சிவலிங்கங் குருவாஞ்சடாக்கர
மமலஞ்சொக்கட்டான் கமலஞ்சதுரக
மிரண்டாஞ் சுழிகுளந்திரண்டாமுத்திரிக
சருப்பதோபத்திர முருப்பதோர்முரச
மொருமூன்றறுமீன் றிருகூடசதுக்க
மேலிருகடகம் வேலுருப்பந்தனம்
வாலைகரந்துறை மாலைமாற்றுமே
மாத்திரைவருத்தனை மாத்திரைச்சுருக்கம்
பாத்திரைப்பரவைக் கோத்திரைவியப்ப
வெற்றிப்படைமனை முற்றுமோனையின்
யமகவெண்பாவுடன் சமரவேலனுக்குச்
சொற்றனனின்புறக் கற்றவராகுஞ்
சேடனஞ்சுண்ட கூடலும்பவானி
அவனுசிக்கீழ்ப் பவந்தீர்முருகன்
பூண்டிப்புராணமும் வேண்டிச்செய்திட்ட
*வாசுதேவனெனப் பேசிடுங்கவிஞனும்
மருதுறைகுமாரனற் றிருவமுதாண்டு
தாய்மகளேசலுஞ் சதகமும்பதிகமும்
நவநவமாக கவிபலவியற்றும்

---

*இவர் தொண்டமண்டல வேளாளர் குலம். மைசூர் அரச ரிடம் பல்லக்கு, குடை, கொடி, சாமரம், யானை, பரி முதலிய பரிசு பெற்று நஞ்சுண்டகூடற் பெருமானுக்கு அளித்தவர்.
இவர் காலம் சுமார் 200-வரு

மட்டில்புகழுடைக் †குட்டியகவுண்டரும்
வன்னக்கவிசொலும் ‡பொன்னப்பகவுண்டரும்
பற்பலபெரியராம் நற்றவர்வாழ்ந்ததும்
எங்குஞ்சிறப்புறு கொங்குநன்னாட்டி
லிதம்பெறுமேலைச் சிதம்பரத்தென்கீழ்
உறைவதுமாகிய தரைபுகழ்செட்டி
பாளையந்தன்னில் வாளேர்கள்தாவும்
மந்தாகினிகுல நந்தாதீபக
மாழிதரித்திடு மேழித்துவசன்.
சீர்பெருங்குவளைத் தார்பெருந்தோழன்
கார்வள்ளிதனிலார் காணியாக்கொண்டோன்
செழுங்கிளைதாங்கு மொழுங்குணர்வுடைய
பழமைசால்குடியி னழகுகுலேந்திரன்
ராமசாமியெனுங் கோமான்சேயாம்
கண்ணியநஞ்சப்ப திண்ணியபூபதி
புண்ணியனுவந்து பண்ணியதவத்தில்
நலமேனுமையொத் தலமேலுதாத்
தய்யோர்கலியுகத் §தையோர்வைசீர்
வருவதாகிய சருவதாரியாண்
டுருதுலாமாத மிருபானோர்நாள்
சுக்கிரவாரந் தக்கருத்திராட

---

† இந்நூலாசிரியருக்கு 6-ம் பாட்டன்.
இவர்சிறு வயதிலேயே கண்ணிழந்து மருதமலை முருகனால் திருவமுது பெற்றுண்டு துதி பலசாற்றி நூல்பலகற்று யோகத்தில் பூமிக்குள் குழியில் 48-நாள் இருந்து பூர்வ செனனமும் கண் போன காரணமும் தெரிந்து எழுந்து வந்து கொஞ்சநாளிருந்து திருவடியடைந்தவர். இவர்செய்த நூல்கள் பல. 1. மருதீசர்சதகம் 2. பதிகம் 3. தாய்மகளேசல். பேரூர் பச்சைநாயகி பதிகம் அந்தாதி. பஞ்சாங்க கணிதமஞ்சரி. கிரக கணித மஞ்சரி முதலிய. இவர் காலம் சுமார் 250-வருடம்

‡ இந்நூலாசிரியரின் தாயைப் பெற்ற பாட்டன்.
இவர் காலம் 70-வருடம் இவர் இயற்றிய நூல் ஒன்றும் கிடைக்கவில்லை.

§ தை யோர் வைசீர்— கலியுக-வருடம் 4989.

முத்பாதிநாழிகை பதினென்பானில்
மங்களஞ்சேருந் திங்களிற்றோன்றும்
வடமேருவைநேர் தட்புயசீலன்
தந்தைதாயிருவரை விந்தையாய்ப்பேணி
யானடியவரைப் பரனென்மதித்து
முத்தம்மாற்று முத்தமகுணவான்
மதியாரணிபசு பதியரனுமைசேய்
தீந்தமிழ்முருகனைப் பேர்ந்தமனந்தனு
மொழியன்போடு வழிபாடடைந்து
தத்துவமுணர்ந்த வித்துவசிகாமணி
மானியலோர்ந்த பூனியன்பஞ்சாய
மன்றனுருப்பினென்றுசமுதாய
வார்க்கிநேசன் மார்க்கிமும்மணிய
மேற்கும்விற்பன்ன னெல்லோர்க்குபகாரன்
சுந்தரநிறைந்த செந்திருவாளன்
வாணரிசைகலி யாணசுந்தரனே.

---

முருகன் துணை.

இஃது

இந்நூலாசிரியர் குமாரன்

திருமிகு. அண்ணாச்சியப்பனால் இயற்றிய

அறுசீர் விருத்தம்.

ஒப்பற்ற வினிமைபெரு முத்தமிழு
நாற்கவியு மோங்கி வாழ
முப்பற்று மற்றகுரு முனிவனுக்கு
மிலக்கணத்தை முதன்மையாகச்
செப்புற்ற கந்தனுக்குச் சித்திரத்திற்
பந்தனத்தைச் செய்த செம்ம
லிப்புவியிற் புகழெந்தை கல்யாண
சுந்தரத்தை யிறைஞ்சினேனே.

---

முருகன் துணை.

இஃது

# இந்நூலாசிரியர் மாணாக்கனும், செட்டிபாளையம் திருவாளர். பூ. ந. கருப்புசாமி செட்டியார் குமாரனும், ஐயூர் தேவாரப்பாடசாலை மாணாக்கருள் ஒருவனும் ஆகிய திருமிகு. பழனியப்பனால் இயற்றிய சந்தக்கவிகள்.

பண். நாட்டை. (உண்ணாமுலை உமையாளொடும்)

தேனார்மலர் முகைகிண்டிடச் செய்காலதி லோடி
வானார்பொழில் பாயும்மது வணிகாப்புரி தனில்வாழ்
மானார்கரத் தெந்தைபதம் மறவா நெறி யுடையோன்
ஊனாருயி ரெவைக்குந்தயை யுள்ளான்பெரு வள்ளல்:

பண். காந்தாரம். (பாடிளம்பூதத்தினானும்)

சேவிற் றிகழ்ந்திடு மேலோன் சிவனார் திருமுடிசூடி
தாவிப் பொலிந்திடு கங்கை தன்குலத்தேயுதித் திட்டோன்
நாவிற் கினியவர் போற்றும் நஞ்சப்பனா மெனுந் தூயோன்
பூவிற் புகழ்ந்திட வாழ்வோன் புண்ணியன் செய்தவச்சேயோன்

பண். கொல்லி. (மண்ணினல்லவண்ணம்.)

கந்தனின் பெருமையைக் காணாசித் திரமதில்
பந்தன மாலையாய்ப் பாடினான் பாரிலே
அந்தமார் கல்யாண சுந்தர வண்ணலாஞ்
சந்தமார் தமிழினைத் தந்தன னெந்தையே.

உ

## இந் நூலாசிரியர் குமாரன் திருமிகு. இராமசாமியால் இயற்றிய

### நேரிசை ஆசிரியப்பா.

பார்தனக்கேற்ற பங்கய மெனவே
ஊர்தனக்கெல்லா முயர்புகழுடையதாம்
அணிதமிழாய்ந்த அறிஞர் விளங்கிய
வணிகபதியினில் வாழ்நற்றாயோன்
மேழிச்செல்வங் கோழைபடாதெனும்
பழமைமொழியை வழியாய்க்கொண்டோன்
மிஞ்சப்புகழுடை நஞ்சப்பமேலோன்
செய்நோன்பின்பய னெய்தப்பிறந்தோன்
கொலைபுரிவேள்வியுங் குற்றமெனப்பல
கலைபுரிந்திட்டோன் கலியாணசுந்தரன்
மயில்வாகனத்தி லயிலாயுதத்தோ
டமர்ந்தேயன்பர்க் கானந்தந்தரும்
கந்தக்குகனார் கழற்குமகிழ்வாய்ச்
சித்திரமாம்வி சித்திரக்கவியிற்
பந்தனமுப்பது பாக்களைப்பாடி
கந்தன்சித்திர பந்தனமாலையென்
றிட்டமாயதற்குப் பட்டமுஞ்சூட்டி
யிப்புவியார்முத லெப்புவியாரும்
போற்றப்புனைந்தார் புனைந்தவர்
சுதன்நானவரின் பதமிறைஞ்சினனே.

### நேரிசை வெண்பா.

சித்தருக்கு நித்தமருள் செவ்வே டிருப்பதத்தில்
முத்திதரப் பத்தியொடு முத்தமிழைச்—சித்திரத்திற்
சுந்தரமாய்ப் பந்தனத்தாற் சூட்டினான் கல்யாண
சுந்தரனு மெந்தை சுபம்.



முருகன் துணை.

இஃது

கோவை அரசியலார்கல்லூரி தலைமைத்தமிழாசிரியர்
திருவாளர். L. ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள்
இயற்றிய சாற்றுக்கவி.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஏராருந் தமிழ்த்தெய்வ மாமெங்க ளெழில்முருகன்
றன்றிறத்தி லிணையொன் றில்லாத்
தாராருஞ் சித்திரபந் தனமாலை யொன்றுசெந்
தமிழ்மொழியிற் றழையச் செய்தான்
சீராருங் கொங்குநன் னாட்டகத்துச் செட்டிபா
ளையமென்னும் பதியில் வாழ்வோன்
காராருங் கரதலத்துக் கலியாண சுந்தரமாஞ்
செய்யதமிழ்க் கவிவல்லோனே.

---

இஃது

கோவை அரசியலார் கல்லூரி உதவித் தமிழாசிரியர்
திருவாளர். ச. அய்யாசாமி பிள்ளையவர்கள்
இயற்றிய சாற்றுக்கவி.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

புன்னகையுட் புரமூன்றும் ஒழிதிகழப் புரிந்தருளும்
புனிதமூர்த்தி
தன்னருமைக் கந்தனுக்குச் சித்திரபந்தனமாலை
சாற்றினுனல்
மன்னியநல் லன்புமிளிர் மாதவத்தால் மோதுவினை
மாற்றுமேலோன்
நன்னயஞ்சேர் வண்புகழான் கல்யாணச் சுந்தரப்பேர்
நாவலோனே.

---

முருகன் துணை.

இஃது

கோயமுத்தூர் ஜில்லா கல்விச்சங்கத்தலைவரும்,
பிரபல அட்வோகேட்டும், அபிஷியல் ரிசீவருமாகிய
திருவாளர் ராவ்சாஹிப்.

**C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் B. A. B. L.,**

அவர்களால் இயற்றிய
சாற்றுக்கவிகள்.

கொச்சகப்பா.

வரந்தருவார் தமிழ்மாது வளருகின்றாள் எனுமொழியால்
சரந்தருவார் தமிழிளமைத் தனம்வியந்தே அலங்கரித்து!
பரந்தருவார் பின்னொருநாள் பார்வழக்குச் சிதையாத
உரந்தருவார் சுந்தரனார் உவந்திளமைத் திறம்வியந்தே (1)

இத்தன்மைத் தமிழணங்கின் இளந்தன்மை காண்கிலனே!
எத்தன்மை உயிரசைவின் எழில்உணர்வும் காண்கிலனே!
மூத்தன்மைத் தமிழ்மாதும் முதியவளாய் விட்டனளோ?
அத்தன்மை அறிந்தவளோ அவள்மக்கள் மறந்தனரோ? (2)

அன்றன்று யான்வந்தேன் அவள் இளமை அறிவிக்க
இன்றின்று வந்தனனே எனச்சொல்லி முன்வந்தான்;
குன்றென்றும் நிலைத்தருளும் குமரன்பா மாலையுடன்
மன்றென்றும் புகழ்நாட்டும் மணவழகப் பெயரோனே. (3)

தமிழ்மாது தண்ணிளமைத் தன்மையிலே இனிஇருப்பாள்;
குமிழ்மாலைத் தன்னுகம் கொண்டணிந்து விளங்கிடுவாள்;
அமிழ்தேபோல் அகங்குளிர அலங்கரிப்பும் பூண்டருளி
தமிழ்மாது சிறந்திடுவாள் தன்தந்தைப்புகழ் அணிந்தே. (4)

முருகன் துணை.

இஃது

கோயமுத்தூர் லண்டன்மிஷின் கலாசாலைத்
தமிழாசிரியர் பூளைமேடு பண்டிதர் திருவாளர்.
அ. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள்
இயற்றிய சாற்றுக்கவிகள்.

## அறுசீராசிரியம்.

செந்தமிழின் றிருவடிவாஞ் செவ்வேளின்
திருவருளைச் சிந்தை சேர்த்து
வந்தவருட் குறிப்பாலே யாத்தான்பந்
தனமாலை மாண்பு மிக்க
பந்தனமா லையினாற்பந் தனமாலை
வீடுகொளப் பாரிற் செய்தான்
முந்தவிதன் பெருமையினை மொழிவதற்கு
நம்மவரால முடியுமோ தான். (1)

இத்தகைய வருட்புலவோ னின்தமிழின்
சுவைமணந்த வியல்வாழ் வுள்ளோன்
மெத்தவருந் தமிழ்ப்பாடல் பாடுபவர்
தம்மினுமே மேன்மை யுற்று
சித்திரநற் பாமாலை தமிழணங்கின்
றிருமார்பிற் றிகழச் சேர்த்தோன்
சித்தமுறை செவ்வேளாஞ் செட்டிபா
ளையத்திலமர் செம்ம லானே. (2)

ஒலியாழி யுலகினிலொண் டீந்தமிழே
யொப்பிலா துயர்க வென்று
விலையேது மின்றிக்கே யறம்புரியுஞ்
செல்வமுள் ளோன்விரும்பிப் பற்றிக்
கலையோதும் மாணவர்க்குக் கசிந்துருகித்
தமிழ்ப் பயிற்றும் கருணையுள்ளோன்
கலியாண சுந்தரக்க வுண்டனெனும்
கற்புநிறை கவிவல் லோனே. (3)

---

உ

குருவே துணை.

# நால்வர் துதி.

---

## வெண்பா.

ஏடுவிட்டுச் சந்துவிட்டு யேந்திழைபொன் பூமிவிட்டுக்
காடுவிட்டுப் பாய்நரியைக் கந்துகமா — யோடவிட்டு
மாடுதொடு மாடுபத மாறுபெறப் பாடுனர்தம்
நாடுமடி சூடுகிறேன் நான்.

---

உ

முருகன் துணை.

# கந்தன்

# சித்திர பந்தன மாலை.



உ

குருவே துணை.

குகமயம்.

# கந்தன் சித்திர பந்தன மாலை.

## ஐங்கரன் முதலியோர் துதி.

### பின்முடுகு நேரிசை வெண்பா.

1 *ஐங்கரனைச் சங்கரனை யங்கமுறை சங்கரியை
பொங்குகலை நங்கையினைப் புங்கவனைத் — தங்குபுகழ்
கந்தனுக்குச் சொந்தமுடன் சிந்தைசெயும் பந்தனைக்குச்
சந்ததமும் வந்தனைகள் தான். (1)

## கந்தன், நாமகள், கணபதி துதி.

### திரிபங்கி.

### நேரிசைக் கட்டளைக் கலித்துறை.

2 கந்தனை யேபர நாதனை யேசித்தி ரக்கவியில்
பந்தனை யாற்சிர மேகொள மாதுத்தி பண்ணிடவே
சிந்தனை யேயுர நாமக ளேசித்தி காந்தனுக்கு
வந்தனை யேவர மீந்தரு ளேபத்தி வைமனமே.

## திரிபங்கியிற் பிறந்த வஞ்சித்துறைகள்.

| கந்தன் துதி. | நாமகள் துதி. | கணபதி துதி. |
|---|---|---|
| 3. கந்தனையே<br>பந்தனையால்<br>சிந்தனையே<br>வந்தனையே | 4 பரநாதனையே<br>சிரமேகொளமா<br>உரநாமகளே<br>வரமீந்தருளே | 5 சித்திரக்கவியில்<br>துத்திபண்ணிடவே<br>சித்திகாந்தனுக்கு<br>பத்திவைமனனே. (2) |

*குறிப்பு:- துதி மங்கல மரபாதலின் மங்கலச் சொல் இன்றெனல் விருத்தம். நாலாரப்பத்தில் சீர் என்ற மங்கலமொழி வந்தமை காண்க.

## முருகன் துதி.

### முற்றுமோனை வெண்பா.

6 கந்தா கடம்பா கதிர்காமா கங்காளன்
மைந்தா மணியே மயிலேறி — நந்தா
விளக்கே விமலா வினைதீர்க்கும் வேலா.
வளக்கேன் வரமருள வந்து. (3)

### திரிபு யமகமடக்கு - பதின்சீர்.

7 கந்தா சலமுத லட்ட மெனும் ந
கந்தா னதிலொளி யிம யத்தீ †ப
கந்தா னிகர்குழல் கற்கண்டாம் ‡பி
கந்தாஞ் சொலுஞ் செந்தாமரை மு
கந்தா னிலங்கச் சாகரஞ்சூழ் செ
கந்தா னுறுசிவன் களுக்குப் ¶ப
கந்தாந்தன்மை யிலங்க வெகு சு
கந்தா னளித்துக் கயிலேயரன் பா
கந்தா னுறுமயிலா முமை சேய்
கந்தா முருகா காங் கேயா சு
கந்தா மொளிர் கடம்பா மேனுல
கந்தா னரசன் பகைய§னி னீ
கந்தான்விழ வெற்றி வேற்சரமே
கந்தா னெனவிடு குமரா கால் வே
கந்தா னுறு மயில் வீர மிகுபோ
கந்தா புருடார்த்தந் தந்தா ளே. (4)

### மாச்சீரால் முடிந்த பின்முடுகு வெண்பா.

8 சமரா புரியாய் தணிகைப் பெருமா
னமரா புரியை யளித்தாய் — குமரா
கதியே பதியே யிதுவே ததியே
நிதியே மதிவேண் டினேன். (5)

### விளச்சீரால் முடிந்த வெண்பா.

9 சீமரு காதிருச் செந்திலி லேவளர்
மாமுரு காகுகா மாமணி — யேமகா
சங்கர னுக்குயர் சற்குரு வெண்கவிக்
கிங்குவா கந்தவே ளே. (6

---

†தீபகம்—விளக்கு. ‡பிகம்—குயில். ¶பகம்—சிவனுந் தன்மை. §அனீகம்—சேனை.

### காய்ச்சீரால் முடிந்த முற்றுமோனை வெண்பா.

10 காரணனே கார்த்திகையாய் கந்தப்பா கண்ணியனே
பூரணனே புண்ணியனே பூங்கடம்பா — ஆரணனே
செந்தமிழைச் சித்திரத்திற் செய்யுளதிற் செப்பிடவே
சிந்தைதனிற் சேர்ந்தருளைச் செய். (7)

### மும்மண்டில வெண்பா.

ஒருபொருள் பயப்பதனை மூன்றாகப் பிரித்தெழுத வெவ்வேறு செய்யுளாய்த் தனித்தனியே பொருள்பயந்து தொடையுங் கிரியுந் தனித்தனியே காணுவது.

---

11 அண்டஞ்சா ராதிசிவ ஞார்சேயே வாமிசுதா
சண்டன்வ ராதிருக்கச் சாமியுனை — அண்டுமெற்குப்
பூதிகொடு காமியமீ பூர்வவினை தண்டவிடு
சாதிருகா சாமியே தா.

12 ஆதிசிவ ஞார்சேயே வாமிசுதா சண்டன்வ
ராதிருக்கச் சாமியுனை அண்டுமெற்குப் — பூதிகொடு
காமியமீ பூர்வவினை தண்டவிடு சாதிருகா
சாமியே தாவண்டஞ் சார்.

13 சாமியேதா வண்டஞ்சா ராதிசிவ ஞார் சேயே
வாமிசுதா சண்டன்வ ராதிருக்கச் — சாமியுனை
அண்டுமெற்குப் பூதிகொடு காமியமீ பூர்வவினை
தண்டவிடு சாதிருகா. (8)

---

## அவையடக்கம்.

### முற்றுமோனைக் குறள்வெண்பா.

14 கந்தனெனுங் காரணத்தாற் காசினியிற் கற்றோரிப்
பந்தனையிற் பாரார் பழுது. (9)

### நேரிசை வெண்பா

15 முத்தமிழால் வைதார்க்கும் வாழ்வளிக்கு முத்தையனை
னத்திறத்தி னுலறைந்த ஞானதினு — வித்தலத்தோர்
சித்திரத்திற் செப்புமியற் செவ்வே டிருக்கவியை
மித்திரத்திற் கொள்வார்க ளே (10)

---

அரும்பதக் குறிப்பு.
சாதி — யுத்தவீரன்.

# கணபதி காப்பு.



உருத்திராக்க கண்டிகா பந்தனம்.



கணபதி துணை.

கணபதி வணக்கம்.

# உருத்திராக்க கண்டிகா பந்தனம்.

## குறளடி வஞ்சி விருத்தம்.

16 முத்திதரு கந்தனின்
சித்திர*சு பந்தனைக்
கத்திமுக †முந்தனைத்
துத்தியது தந்தனே.

---

(அ. கு.)

*சு—நன்மை. †முந்தன்—அறுமுகனண்ணன்

துறவக்குறிப்பு:- 4-வது எழுத்தும், 36-வது எழுத்தும் பொருந்தப்பாடுவது. ஆக எழுத்துக்கள் 39.



வெற்றிவேலுற்ற துணை.

இரட்டை நாக பந்தனம்.

முருகன் துணை.

# நூல்.

## 1. இரட்டை நாகபந்தனம்.



### நேரிசை வெண்பா.

17 சீராரு சீலா திருவே சகநாதா
ஆராரு பாதா வருளகனே — பாராயே
செவ்வே ளகநம்பு சீவகனர் தேசிகனே
யிவ்வேளை யேயருளு மின். (1)

### இதுவுமது.

18 ஈராறு தோளா கதியிலே யேருகா
சீராறு வாகா சிவைமகனே — யோராக
காலயிலே திடம்மே தோகைத்தே ரேருழுத்தே
வேலையிற்பார் வைய மிசை (2)

---

(அ, கு) காலயிலேதிடம்மே - கால் - அயிலே - திடமே ஒளிவீசும் வேலாயுதமே உறுதி.

தோகைத்தேர் - மயில்வாகனம். ஆடும்பரி - (கந்தரனுபூதி)

(அ. கு) 1, 2-வது பாட்டு. 12 – 4 – 36 – 8 – 19 / 17 – 34 – 41 – 45 – 49 }
1-வது 2 — 21 — 32 — 51 — 36 — 25 — 47 }
2-வது 2 — 21 — 32 — 51 — 6 — 10 — 23 }
1-வது 10 - 43 — 6 — 28 — 23 }
2-வது 25 - 28 — 30 — 43 — 47 } வது எழுத்துக்கள் பொருந்தவும்' பாட்டு ஒவ்வொன்றுக்கு 52 எழுத்தாகவும் வருவது.

ஓம் சரவணபவ.




## 2. சடாக்கர பந்தனம்.

### பின்முடுகு வெண்பா.

19 பூசமுர மேவகுண தீபநவ பூர்வ மொழி
நேசவள்ளிக் காப்புனத்தில் நின்றகுகா — பாசமொடு
காலதண்ட காலனெண்ட ஆலமுண்ட நீலகண்ட
பாலதண்ட பாணியென்னைப் பார்.




## 3. நான்காரைச் சக்கிர பந்தனம்.

### குறளடிவஞ்சி விருத்தம்.

20 வாகனா சிகி வேலவா
வாலவே தகு மாரவா
வாரமா நிதி சேரவா
வாரசே கர னாகவா.

---

19-வது கவியின் அ. கு.

பூசமுரமேவ — பூசநக்ஷத்திரம்சிறப்படைய
பூசநாளினிலுபவாசத்துடனேகூடி புனுகுகாவடி
கொண்டுபூசிப்பாருனைப்பாடி (கீர்த்தனை)

தைப்பூச விழாக்காணாது போதியோ பூம்பாவாய்.
(சம்பந்தர் தேவாரம்.)

(து. கு) நடு. அறுகோணத்தில் சரவணபவ பொருந்தும்படி 2 - 4 - 6 - 8 - 10 - 12 எழுத்துக்கள் முறையே சரவணபவஆகவும் 49—54--56—61 எழுத்தாகவும் ஓங்காரத்தில் 10 இடமாகவும் 6–6 எழுத்துக்களாகவும் வர பாடுவது. ஆக எ. 72 அல்லது 73.

( து. கு. ) 1—8—9—16—17—24—25—32— இந்த எழுத்துக்கள் ஒன்றாகவும், 2/32 3/30 7/10 6/11 14/19 15/18 22/26 23/27 எழுத்துக்கள் பொருந்தும்படி வருவது ஆக எழுத்துக்கள் 32.




மாலின் மருகன் மலரடி துணையே.

# 4. மற்றுமொரு நான்காரைச் சக்கிர பந்தனம்.



## நேரிசை வெண்பா.

21 வேலவா யோகா விசாகா குகமுருகா
சீலவா நாதாதி சாமியே — கோலமிகு
வேங்கடத்தன் சீமருகா வித்தகா வென்பாவே
வீங்குபுய மீதணிக வே.

---

(அ. கு) 1, 2-வதுவரிகள் 13-13 எழுத்தாகவும், 7-வது எழுத்துக்கள் ஒன்றேயாகவும் 1/27-55 24-14 13-41 26-48 எழுத்துக்கள் பொருந்தும்படி பாடுவது ஆக எழுத்துக்கள் 55,







# 5. இரத பந்தனம்.

—⊱✣⊰—

### நேரிசை வெண்பா.

22 ஆதி பதிபாக மாமாது பாலாவா
சேதிகாப் பாயினத் தீயகுல — ஏதியரை
முந்தவே வென்று முனிதவரை ஏந்து
கந்தவே லப்பா கதி.

---

(அ. கு.) ஏதியர்—பகைவர்.

(து. கு.) 2-4-52 ஓரே எழுத்தாகவும், 5/51 9/50 15/49 23/48 31/47 37/46 41/45 எழுத்துக்கள் பொருந்த வருவது ஆக எழுத்துக்கள் 52.




சிவசண்முகன் துணை.

# 6. சிவலிங்க பந்தனம்.

கொச்சகப்பா.

23 கண்டவுட னேதாழக் காதன் மிகவகத்தே
கொண்டன்பு முத்தமிழ்வண் குகநேச கச்சோலை
செண்டமரு கடம்பினிதாச் சேர்த்தகுழல் வள்ளிபதி
பண்டைப் பவம்போக்கும் பழனிமலைச் சண்முகனே

---

(அ. கு.) கச்சு—கச்சையையும் ஓலை—தோட்டையும்
செண்டமருகடம்பு—கடம்பைப்பூச்செண்டையும்

(து: கு.) 6/84 16/83 24/82 30/81 34/80 36/79 38/78 42/77 48/76 56/75 67/74 எழுத்துக்கள் பொருந்த வருவது- ஆக எழுத்துக்கள் 84.

பழனிநாதன் பாதந் துணையே.




மற்றுமொரு இரத பந்தனம்.

# 7. மற்றுமொரு இரத பந்தனம்.



## நேரிசை வெண்பா.

24 நானே வலவேலை நம்பினேன் சண்டசமன்
தானேவு பாசமினிச் சங்கிவிழத் — தானேப
மால்தணிமா மாப்பிளையே மால்கால்பழனியலை
வேலவனே கந்தா விளம்பு. (1)

## இதுவுமது.

25 ஆமாறு வீருதிகழ் ஆரணனே யாற்றுபவம்
போமாறு மாபதி பூரணி — கோமேலள்
சேயே குமாரகுல தீப திருவீறு
மாயோன் மருகா மதி. (2)

---

(அ. கு.) 1-வது ப—வில். மால்கால்—ஒளிவீசும்.
2-வது வீர்—உ—வீர்—அதிகம்உ—வித்தை
கோமேலள்—இடபவாகனத்திலமரும், உமை.

(ஆ. கு.) 1-வது கீழ்பீடம் 2/57 3/56 4/55 5/54 6/53 16/52 24/51 30/50 34/49 36/48 சக்கிரத்தில் 5—5 ஆகவும், அச்சில் 1-ஆகவும் ஆக எழுத்துக்கள் 64-ம்.

2-வது மேல்பாகம். 2/45 3/44 4/43 5/42 6/41 16/40 24/39 30/38 34/37 பொருந்த வருவது. ஆக எழுத்துக்கள் 52.

கோழிக் கொடியனடியிற்பணியே.

# 8. மும்மீன் பந்தனம்.

நேரிசை வெண்பா.

26 வாருலவு மாவேர் சேர் செந்திற்க திர்வேல
வாரணவி லோதனனே வாமிமகா — ஏரகா
வாதணைவா காவேநீ நாடக மாகிவல
வாதர வாகிடவே வா.

---

(அ, கு.) வாது அணவா—வாதுநடுவா? நாடு அகம் ஆகி— நாடும்மனத்தினிடமாகி.

(து, கு) 1-19-37-55-ம் ஓரே எழுத்தாகவும், 3/18 6/17 9/16 12/15 21/36 24/35 27/34 30/33 39/54 42/53 45/52 48/51 எ. பொருந்துவது ஆக எ. 55.




# 9. சொக்கட்டான் பந்தனம்.

## ஒற்றில்லாத நிரோட்டக நேரிசை வெண்பா.

27 தாயனைய சேயனே தாகனக யேகனே
தாயநய ஞேயனே நேயரிய — லாயனே
ஈதாநா தாநீதானே சாலநல சீலனே
காதாதே தாசீதா கா.

---

(அ கு.) i தாகனகயேகனே—தருவாய் பொன்போன்ற ஒப்பற்றவனே (தருவாய் பொன்னை ஒப்பற்றவனே)

ii தாய்—முதன்மை. நயம்—வேதசாஸ்திரம், ஞேயன்—அறியப்படுதினவன், நேயரியலாயனே—நேயர்களுக்கு இயல்பானவனே.

iii ஈதா—இலக்குமி கடாக்ஷம் கொடு.

iv காதா—கற்பகத்தை தா. தேதா—கிருபை தா. சீதா—திருவைத்தா. கா—காப்பாற்று.

(தொ கு) 2—4—6-ம் 9—11—13-ம் 16—18—20-ம் 23—25—27-ம் 30—32—34-ம் 37—39—41-ம் 44—46—48-ம் ஒவ்வொரு எழுத்துக்களாக பொருந்துவது ஆக எழுத்துக்கள் 49.



குமரன் துணை.

## 10. கமல பந்தனம்.

பின்முடுகு வெண்பா.

28 நாதசுத வேதபத மோதமுத நாதனெத
போதனரே போற்றலுறு பூரணனே — பாதிமதி
வேண்டியணி தாண்டவசே யாண்டகையே வேண்டு
யாண்டுகொள வேண்டுமினி யே. [மெளனை

(அ. கு.) நாதனெ—னெ—குறுக்கல் விகாரம்.
னே—எனக்கூட்டுக, வேண்டுமுருகா எனவும் வரும்.

(து கு) 2-4-6-8-10-12-14-16-வது எழுத்துக்கள் ஒன்றேயாகவும், 2-வது சுற்று 16-ஆகவும், 3-வது சுற்று 32-ஆகவும் பொருந்த வருவது- ஆகஎ. 64




மருதுறைகுமரன் மாணடி போற்றி.

## 11. சுழிகுளம்.

### வஞ்சித்துறை.

29. மலைமகள் பாலக
லைதருமுதா லேவல
மருதுறை வளலேபா
கமுறை திருவ தாள்.

---

(அ. கு) பாகமுறை மலைமகள்பால கலைதருமுதலேவல்ல மருதுறைவள்ளலே திருவதாள். எனக்கூட்டுக.

(தா கு) 2/9 3/17 4/25 5/32 6/24 7/16 11/18 14/23 20/27 21/30 12/26 13/31 எழுத்துக்கள் பொருந்த வருவது. சந்தியில்லாத எழுத்துக்கள் 8, ஆக எ 32





தேவர் சேனாபதி சேவடி துதியே.

## 12. மற்றுமொரு சுழிகுளம்.



30 சிவ சுதனே முருகா
வயிர வேலோனே பாரு
சுரபதியகனே மு
த்தேவ திரு வியலோனே.

---

(அ. கு) அகன்நேம்—பெரியஅன்பை. உதவே—அருளே.
(து. கு.) 29-வது கவியைப் பார்க்கவும்.



| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மா | ணி | க் | க | வா | ர | ம | ன் |
| ணி | த | ற | வா | கா | ந் | ர் | ம |
| க் | கே | து | ச | வே | தோ | லே | ர |
| க | மோ | ழி | மொ | வா | ணி | யி | வா |
| வா | கா | ணி | வ | ணே | மி | ம | க |
| ர | கி | கு | க் | தே | ர | ய் | க |
| ம | த் | தி | ல | ரு | ள் | செ | ணி |
| ன் | ம | ர | வா | க | க் | ணி | மா |

வள்ளிமணாளன் துணை.

## 13. சதுரங்க பந்தனம்.

நேரிசை வெண்பா.

31 மாணிதணிக் கேதுறக்க வாசமொழி மோகவா
காணிவ ணேவரவே காவாரந் — தோணிமிர
தேக்குகிர மத்திலருள் செய்மயிலேர் மன்மா
வாக்கணிமா ணிக்கவார மன்.

---

(அ. கு) மாண்—இதண்—பெரியபரண். மரவா-மரம்வா வுகின்ற. கணி—வேங்கை

(து. கு) 2/4 5/9 10/16 17/25 26/36 37/49 50/64 58/56 59/55 60/54 61/53 62/52 63/51 எழுத்துக்கள் பொருந்த வருவது. ஆக எழுத்துக்கள் 64.



குறிஞ்சிவேந்தன் குரைகழல் துணையே.

## 14. கோமூத்திரிகா பந்தனம்.

### வஞ்சி விருத்தம்.

32 சாமியாறு முகாகுக சந்தனே
நேமிமாபரு காநித முந்தனை
தோமிலாறுது கானக கந்தனே
வாமிவாம மகாசுத வந்தனை.

---

(அ. கு.) தோம்—இல்—ஆறு—து.
குற்ற மில்லாத (கான்) ஆறுகளையுடைய பரிசுத்தமான.
நிதமுந்தனை—தினமும் உன்னை.

(து. கு.)
1-வரி. 2 4 6 8 10 12-க்கு
3-வரி. 26 28 30 32 34 36 ஆகவும்.
2-வரி. 14 16 18 20 22 24-க்கு
4-வரி. 38 40 42 44 46 48 ஆகவும்.
எழுத்துக்கள் பொருந்துவது.
ஆக எழுத்துக்கள் 48.



ஆறுமுகன் துணை.

## 15. ஆறுரைச்சக்கிர பந்தனம்.

### நேரிசைக் கட்டளைக் கலித்துறை.

33 தண்மதி வில்வம் புனைகாள கந்தர சங்கரன்றன்
கண்ணதிற் றீப்பொறி யாறளை வாக்கந்தன் றுனெனநீண்
மண்ணிடை வந்து வரமரு ளண்ணலின் வண்கழற்குத்
தண்மைக் கவியொடு மல்லியின் றார்கொண்டுஞ் சாத்து
[வையே

---

(து. கு.) முதல் 3 வரிகளும் 23–23–23-எழுத்தாகியும், 12-வது எழுத்துக்கள் ஒரே எழுத்தாகியும் 1/70 24/74 47/78 23/82 46/86 69/90 எழுத்துக்கள் பொருந்தும்படி வருவது ஆக எழுத்துக்கள் 93.

சேந்தன் துணை.

# 16. சருப்பதோபத்திர பந்தனம்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கா | வா | யோ | நீ | நீ | யோ | வா | கா |
| வா | தா | தூ | யே | யே | தூ | தா | வா |
| யோ | தூ | நீ | தா | தா | நீ | தூ | யோ |
| நீ | யே | தா | தா | தா | தா | யே | நீ |
| நீ | யே | தா | தா | தா | தா | யே | நீ |
| யோ | தூ | நீ | தா | தா | நீ | தூ | யோ |
| வா | தா | தூ | யே | யே | தூ | தா | வா |
| கா | வா | யோ | நீ | நீ | யோ | வா | கா |

## கலி விருத்தம்.

34 காவா யோநீ நீயோ வாகா
வாதா தூயே யேதூ தாவா
யோதூ நீதா தாநீ தூயோ
நீயே தாதா தாதா யேநீ.

---

(பதவுரை.) காவா யோநீ—நீ காப்பாற்றுயோ? நீயோ வாகா—நீயோ (காப்பதில் வெற்றிமாலை யணிந்தவன்)

2. வாதா—(அப்படியிருந்தும் என்மேல்) வாதா. தூயே—(நீ காப்பாற்றுவிடில்) பற்றுக்கோடு ஏது? யேதூதா—(காப்பாற்ற இன்னும்) என்ன வருத்தம்?

3. வாய்ஓது நீதான்—வாயாற் (புகழ்ந்து) சொல்லுவதற்கு அருமையான நீதியுடையவனே, தூயோ—பரிசுத்தமானவனும்.

4. நீயே தாதா—எப்பொருள்களுக்கும் இறைவனானவனும் நீயே, தாயே நீ—தாய் போன்றவனும் நீயே தான். (ஆதலால்) ஈ—(காப்பாற்றவேண்டிய அருளை) கொடுப்பாய் தா—தருவாய்.

(து. கு.) 1—8-ம் 10—15-ம் 19—22-ம் 20-21-ம் 2—7—9—16-ம் 2—6—17—24-ம் 4—5—25—32-ம் 11—14—18—23-ம் 12—13—26—31-ம் 27—30—20—21-ம் பொருந்த வருவதுடன் 8—8—64 ஆக அரை கீறி வரிக்கு எட்டு எழுத்துக்களாக நான்கு வரி மேல்கண்ட எண்களுக்கு அமையப் பாடி மேல் நின்று கீழும், கீழ் நின்று மேலும் எழுதி மேலும் கீழும், கீழும் மேலும், முதலும் இறுதியும், இறுதியும் முதலும் மாலை மாற்றாக நான்கு முகத்தாலும் வாசிப்பினும் அச் செய்யுளே வரப் பாடுவது: ஆக எழுத்துக்கள் 32.



# 17. சதுர நாக பந்தனம்.

## நேரிசை வெண்பா.

35 மேலா பகவா குகனே வெகுகண
வேலா வவாவை வெலுகவே — கோலா
கலாப சுகனேகா வாழியே கதிரோர்
கலாப மயில்வா கனே.



## 18. எட்டாரைச்சக்கிர பந்தனம்.

### நிலைமண்டில ஆசிரியப்பா.

36 அரவணிசங்கர னழற்கணிலுதித்து
சரவணக்கேணி தனதிடத்தமர்ந்து
அரனிடத்தவளி னயிறன்னைப்பெற்று
அரக்ககுலசூர னழியப்படுத்தின
அறுமுகசரவண அப்பன்அடியிணை
துறவுறுதுணைநற் றுதிப்பனதுணிவே.

---

(து. கு) முதல் நான்கு வரிகள் 17-எழுத்துக்களாகவும் 9-வது எழுத்துக்கள் ஒன்றேயாகவும் 1/63 18/73 35/77 62/81 17/85 24/89 41/93 68/97 எழுத்துக்கள் பொருந்துவது. ஆக எழுத்துக்கள் 100.

---

35-வது கவியின் (அ. கு) கோலா—அழகா. கலாபம்—அரைப்பட்டிகை, தோகை.

(து. கு) 5/43 7/28 9/18 11/13 16/31 20/37 26/39 எழுத்துக்கள் பொருந்த வருவது ஆக எ. 45.



ஞானபண்டிதன் துணை.

## 19. கடக பந்தனம்.

——— ——— 

### நேரிசை வெண்பா.

37 நாகமக ளாகமது ஞானமன மோன மொடு
போகமக லாதவகை பூணுபவா — தோகைமயி
லேறிவிளை யாடுமுரு காகுகவி வேழைபவ
மாறியிட வேகருணை வை.

---

(து கு) 2—4—6-ம் 10—12—14-ம் பொருந்தி 57 எழுத்துக்களைக் கொண்டு முடிவது






கந்தன் பாதம் சிந்தை செய்வாய்.

## 20. முரச பந்தனம்.

### ஏகபாதக் கலி விருத்தம்.

38 பாத தாமரை தந்தனை யேகுகா
பாத தாமரை தந்தனை யேகுகா
பாத தாமரை தந்தனை யேகுகா
பாத தாமரை தந்தனை யேகுகா

---

(பதவுரை) (1) பாதத்தா—செய்யுட்கள் தவறாமல்
மரு—(திருவருண்)மணமாகிய. அனை-அன்-ஐ நன்மையை இன்மை செய்யுங் கோழைத்தனத்தை.
யேகுகா—போகும்படி காப்பாய்.

2. பா—பரந்த உலகங்களை உண்டாக்குர். த—பிர்மன், தாமர்—கற்பகப்பூமாலையணிந்த தேவர்கள். ஐ—பிதாவாகிய சிவன். (இவர்களுக்கு) தந்து—கல்விநூலைக்கொடுத்து அல்லை—அஞ்ஞானத்தைநசிப்பித்து. ஏ—வியப்பையுடையவனே, கு—பூலோகத்தில், கா—கற்பகம்போல் பலிக்கத்தக்க

3. பாத—(செய்யுளின்) அடிகளை, தா—கொடுத்தருள்க. மரை — வள்ளிமானிடத்தில், தந்தனை — கொம்புகளையுடைய யானையாகிய கணபதியை பயமுறுத்தும்படி. ஏ—செலுத்தியவனே. குகா—குகக்கடவுளே. (இருதய குகையிலிருப்பனே)

4 பாததாமரை—உன்னுடைய திருவடித்தாமரைகளில் வெளிப்படுகின்ற. தந்து—நூல் போன்ற கருணையானது. அனையே—என்னை மேல்வழிக்கேற்றுந் தாயொத்ததேயாம் குகா — ஆதலால் என்னை குற்றமில்லாது காப்பாய்.



கடம்பன் துணை.

## 21. மற்றொரு கடக பந்தனம்.



நேரிசை வெண்பா.

39 ஓதுமது மீதுவெகு நேசமொடு பூசைசெய
வோதுவதுன் பொன்னன்பே யுத்தமனே — யாதலினால்
வந்தாள்வாய் கந்தமுத லேபாலா வேலனே
கந்தாகு காகடம்பா கா.

---

(அ. கு) கந்தம்—கிழங்கு. கந்தமுதலே — எவற்றிற்கும் மூலமுதலே.

(இ. கு) 2—4—6-ம் 18/20 23/25 45/47 50/52 எழுத்துக்கள் பொருந்தி 63 எழுத்துக்களில் முடிவது.



# 22. அறுமீன் பந்தனம்.

## நேரிசை ஆசிரியப்பா.

40 சங்கர தனையா சாரங்க மருகா
ஐங்கரன் றம்பீ காரணி புதல்வா
மணிமுடி யவனே மலரணி நவிரா
திணியுறு பகனே சேணவிர் மார்ப
கவினுறு பாதா காத்திடும் பரனே
தவித்திடா தாளே சாமீ கோனே
தொழுதிவ னுனையே நானே
பாடினேனே பாப்புனைந் தோனே,

---

(அ. கு) நவிரம்—தலை பகம்—சிவத்தன்மை.

(து. கு) 1-ம் எழுத்து ச 6/99 14/23-ம் 18-ம் எழுத்து ர. 31/40-35-ம் எழுத்து வ. 48/57-52-ம் எழுத்து ண. 65/74-69-ம் எழுத்து ப. 82/91-86-ம் எழுத்து வ். பொருந்தி 102 எழுத்துக்களால் முடிவது.






வேலாயுதன் துணை.

## 23. வேலாயுத பந்தனம்.

### வஞ்சி விருத்தம்.

41 வேலவா குக நாதனே
வாலவே தமு மோதியே
காலவே தயே நாசுற
நீலமா மயி லூர்வையே.

---

(த கு.) 1/11 6/23 12/20 16/22
பொருந்தி 33-ல் முடிவது.

விசாகன் துணை

# 24. கூட சதுக்கம்.

### சந்த விருத்தம்.

42 போதாவே மாதாகா லாமயூ ராநேசா
யோதாதி யேவாவே கோவேபூ பாலாவா
நாதாவே சூதேதே காவாயே தேவாவா
தாதாமா நேதாவா வேலாதா தேவாவா.

---

(பதவுரை.) 1 போதாவே—ஞானவானே மாதாகால்ஆ—உமாதேவியின் கான்முளையானவனே. மயூரா—மயில் ஊர்பவனே. நேசா—அன்புடையவனே.

2. ஓதா ஆதியே—சொல்லும் முதல்வனே. வாவே—காக்க வருவாயே. கோவே—தேவனே. பூபாலா—பூமியைக் காப்பவனே.

3. நாதாவே—நாதனே. சூதேதே—காப்பதில் என்ன சூது. காவாயே — காப்பாற்றுவாயே. தேவா—தெய்வமே. வா—வருவாய்.

4. தாதா—அருள் வள்ளலே. மாநே—பெரிய அன்பை. தா—கொடு. வா—வருவாய். வேலா—வேலனே. தாதே—கிருபையைக் கொடுக்க வருவாய்—வருவாய். 4-வது அடிக்கு விசேட உரை. தா—அருளைக்கொடு. தாமா—குன்று தோராடி. நேதா—அன்பைக்கொடு என்றுமாம்.

(து. கு.) 2/37 5/38 8/39 11/40 14/41 17/42 20/43 23/44 26/45 29/46 32/47 35/48 பொருந்தி 48—எழுத்துக்களில் முடிவது.

மருதபிரான் துணை.

## 25. அட்டநாக பந்தனம்.



மருதப்பிரான் துணை.

# 25. அட்ட நாக பந்தனம்.

கலி விருத்தம்.

43 அருளுரு மாதுமை சேயே யரிய
பெருகுரு நேயஞ் சேரும்பி ரானே
ஒருமை வீட்டை யோரா தருள
மருது மும்முடை வருவேல் முருகனே.

(அ. கு.) மும்முடை—மூன்று நாற்றம்.
1. மாமரம். 2 கிரவுஞ்சம் 3 சூரன்.

(து. கு) 4/35 6/39 8/20 12/18 22/41 24/33 27/45 31/43 எழுத்துக்கள் பொருந்த வருவது. ஆக எழுத்துக்கள் 51.

# 26. மாலை மாற்று.

ஒரு செய்யுளை யீறுமுதலாக வாசிப்பினு
மச் செய்யுளே வருவது.

கலி விருத்தம்,

44 தேயா வேலா காவா தேதே
தேரா தாரா பாலா வாதே
தேவா லாபா ராதா ராதே
தேதே வாகா லாவே யாதே.

(பதவுரை) 1 தேயாவேலா—தேய்தலில்லாத வேலையுடையவனே காவாதேது—என்னை காவாததேது.

2 ஏதேராதாரா—வண்டுகள் ரீங்காரத்தோடு தேர்ந்த மாலையையுடையவனே, பாலா வாதே—பாலனை என்னை நீ (காப்பாற்றுதது) வாதே

3 தேவ ஆல் ஆ—தெய்வக்கார்த்திகை மீன். (உன்னை காப்பாற்றியது போல்) பாரா தாராதே—பார்த்துக் காப்பாற்றுதது எனக்கு அதிக ஆராமையே யாகும்.

4 தேதேவா கால் ஆ—கிருபையுடைய சிவபெருமான் கான் முளையானவனே. வேயாதே-பாசத்தால் என்னை மூடாதே.

செவ்வேள் துணை.

# 27. மாத்திரை வருத்தனை.

ஒருபொருளைப் பயந்துநிற்ப தொருசொல்
ஒருமாத்திரை யேற்றப் பிறிதொரு சொல்லாய் நிற்பது.

### கலி விருத்தம்.

45 மாத்திரை யேறிய மணிமிடற் றின்னொடு
மாத்திரை யேறிய மாவணி சாறுமுன்
மாத்திரை யேறிய வண்ணள பேறியே
மாத்திரை யேர்வயல் வாமிம கனேகா.

---

(அ. கு.)

1 மிடறு—களம். ஒரு மாத்திரையேற காளம்—சூலம்.
2 அணி—கலன். ,, காலன்—யமன்.
3 அளபு—தொகை. ,, தோகை—மயில்.
4 வயல்—செய். ,, சேய்—செவ்வேள்.

சூலத்தைக்கொண்டு யமன் வருமுன் மயிலிலேறி செவ்வேள்வேளே; வாமிமகனே வந்து காப்பாற்றாய்.

# 28. மாத்திரைச் சுருக்கம்.

மேலே சொன்னவற்றை மாறுபடத் தொடுப்பது.

### கலி விருத்தம்.

46 மாத்திரை நீங்கிய மாமுக தேகத்தை
மாத்திரை நீங்கிய மாசுண நஞ்சதாய்
மாத்திரை நீங்கிய மானுறு மாகத்தில்
மாத்திரை நீங்கநல் வாரமே கேள்குகா.

---

(அ. கு)

1 தேகம்—காயம். ஒரு மாத்திரை நீங்க கயம்—யானை(முகனே)
2 நஞ்சு—காரி. ,, கரி—யானை (யாக)
3 மாகம்—வானம். ,, வனம்—காட்டில்(வர)
4 வாரம்— ,, வரம்—வரம் கேட்டவனே.

யானைமுகனே யானையாக வள்ளியின் பொருட்டு காட்டில் வரும்படி வரம் கேட்ட குகனே காப்பாய்.

தண்டபாணி துணை!

## 29. கரந்துறை செய்யுள்.



பிறிதொரு செய்யுள் புகாது எழுத்துப் பொறுக்கிக் கொள்ள வேறு செய்யுளாவது.

### நேரிசைக் கட்டளைக் கலித்துறை.

47 சீரே நிறைசுகச் செந்திலில் வேலான் றிரட்பதத்தை
நீரே நிறைகுடத் தான்றொழுக் காட்டிநல் னேசமுற
வாரே நிறைமணா நன்னகச் சேயனை மானுதவும்
ஆரே நிறைமகள் காந்தனைச் சார்துதி யாற்றுநெஞ்சே.

### இதில் கரந்தன செய்யுள்.

### குறள் வெண்பா.

48 நல்வேலா செட்டிநகர் நஞ்சப்ப மன்னுதவு
கல்யாண சுந்தரனைக் கா.

அம்பிகை பாலனடியைப் பணியே.

## 30. மற்றொரு கூடசதுக்கம்.



ஈற்றடி எழுத்துக்கள் ஏனைமூன்றடியுள்ளுங் கரந்து நிற்கப்பாடுவது.

### நேரிசை வெண்பா.

49 கந்தவேற் காரணனே கார்த்திகையாய் பூங்கடம்பா
சந்தனே யேகதந்தன் றம்பியே — விந்தைசேர்
நல்யா மனோசுதனே நஞ்சப்ப மன்னுதவு
கல்யாண சுந்தரத்தை கா.

கோழித்துவசனடியிற் பணியே,

## வாழி.

---

### திரிபாகி.

மூன்றெழுத்துக்கூட ஒரு மொழியாகியும்
இடையுங்கடையுங்கூட மற்றொரு மொழியாகியும்
முதலுங் கடையுங்கூட மற்றொரு மொழியாகியும் வருவது

### நேரிசை வெண்பா.

50 இந்திரர்க்கு நீகொடுத்தா யேரப்பன் மாயனுனுந்
தந்திரர்க்குத் தான்கொடுத்தான் சண்முகனே—அந்தரத்திற்
றேவாளி லோதனமாய்ச் சேர்த்தியவா நூலந்தங்
கோவாழி கோழிவா ழி.

---

(அ. கு) கோ—தேவலோகத்தை இந்திரனுக்கு நீகொடுத்தாய்
ஆழி—சக்கரத்தை மாலுக்கு விஜயகர் கொடுத்தார்
கோழி—சேவலை கொடியாக நீ பிடித்தாய்.
வாழி—வாழ்த்து. நூலந்தத்திற் சொல்லுவது.
கோவாழி—கந்தக்கடவுள் வாழி.
கோழிவாழி—அவர் சேவற்கொடி வாழி,
நூலந்தம்—இந்நூலும் முடிவு பெற்று வாழி.

கந்தன் சித்திர பந்தன மாலை முற்றிற்று.

சுபம்! சுபம்!! சுபம்!!!

குருவே துணை.

---

குருவே துணை

# 1. திருப்பரங்குன்றம்.

## முருகர் படைவீடாறுக்கும் முற்றுமோனை யமக நேரிசை வெண்பா.

பரங்குன்றம் பற்றும் பரஞ்சுடரே பாரன்
பரங்குன்றம் பண்டைப் பணிந்தேற்—பரங்குன்றம்
என்ன நீ யின்னருளை யின்னேதா னீந்தெம்மை
என்ன நீ யேலா விது.

(பதவுரை)

பரங்குன்றம் பற்றும்—திருப்பரங்குன்றத்திலிருக்கும். பரஞ்சுடரே—பரஞ்சோதியே. பார்—பார்ப்பாய். அன்பர் அங்கு உன் தம்பண்டை—அடியார்கள் அவ்விடத்தில் உன்னுடைய கிருபையை பணிந்தேற்பர்—வணங்கிப் பெருவார்கள். அம்குன்றம் என்ன—அழகிய மலைபோன்ற. நீ இன்னருளை இன்னேதானீந்து—நீ இன்பமாகிய கிருபையை இப்போதே கொடுத்து. எம்மை என்ன நீயேலாவிது—என்னை நீ யேற்றுக் கொள்ளாதது என்ன காரணம்?

(வி, ரை.) உன்னும்—நினைக்கும். தம்முடைய—உன்னுடைய

# 2. திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்.)

சீரலைவாய் சேருஞ் சிலம்பனே தீங்கடம்பா
சீரலைவாய் சீமருகா தேவர்களைச்—சீரலைவாய்ச்
சேரா திருக்கவே செய்தோனே தீவினைகள்
சேரா திருக்கவே செய்.

(பதவுரை)

சீரலைவாய்—கடலலை மோதும்படியான திருச்செந்தூரில். சேரும்—சேர்ந்திருக்கும். சிலம்பனே—மலைகளையுடையவனே. தீங்கடம்பா — தேனொழுகும் கடம்பையணிந்தவனே. சீரலைவாய் சீமருகா—சிறப்புடைய கடலலையிடத்தபரும் திருமகள் மருகனே. தேவர்களை — இந்திரன்முதற் றேவர்களை. சீரலைவாய்ச் சேராதிருக்கவே செய்தோனே—புகழானது (சூராதிகளால்) அல்லற்பட்டழியாது செய்து வைத்தவனே. தீவினைகள் சேராதிருக்கவேசெய்—என்னை தீநெறிகள் சேராதிருக்கும்படி செய்து காப்பாய்.

## 3. திருவாவினங்குடி.



நல்லாவி னன்குடிவாழ் நாதா நமன்சேர்ந்து
நல்லாவி நாடி நடக்காமுன்—நல்லாவிக்
கட்டறுப்பாய் காலனையுங் காலறுப்பாய் காரசுரக்
கட்டறுப்பாய் கந்தா கதி.

(பதவுரை.)

நல்லாவினன் குடிவாழ் நாதர்—திருவாவினன் குடியில் வள்ளுர் இறைவா. நமன்சேர்ந்து நல்லாவிநாடி நடக்காமுன்—யமன் வந்து நல்லஉயிரைக்கொண்டு போகாமுன்னே நல்லா—நன்றாக. இக்கட்டறுப்பாய்—துன்பத்தை நீக்குவாய் காலனையுங் காலறுப்பாய்—யமனை வாராமற் காலைத்துண்டிப்பாய். காரஅசுரக் கட்டறுப்பாய்—கருமையான அசுரக் கூட்டங்களைக் களைந்தவனே. கந்தா—உமையம்மையாற் சேர்க்கப்பட்டவனே. கதி—நீயே துணை.

## 4. திருவேரகம்.

ஏரகத்தி லேவளரு மெம்பெருமா னேர்பொதிகை
ஏரகத்தி யென்முனியை யேற்றவிதத்—தேரகத்தி
யம்மளிக்கு மாறுமுக னருளி லாகபவ
யம்மழிக்கு மாதரவு மாம்.

(பதவுரை.)

ஏரகத்திலே வளரும்—திருவேரகத்தில் எழுந்தருளும். எம்பெருமான்—எனது நாதர். ஏர்பொதிகை ஏர்அகத்தியென் முனியை—அழகுபொருந்திய பொதிகாசலத்திலமரும் அகத்தியன் என்னும் முனிவரை. ஏற்றவிதத்தேர்—ஏற்றுத் தமிழை உபதேசித்துத் தேர்ச்சியடையச்செய்த விதம். அகத்தியம் அளிக்கும் அறுமுகன்—அறுமுகனைத்துதித்தால் கட்டாயம் கொடுப்பார் அர் அருளில் ஆகவ பயம் அழிக்கும்—பொருந்தும் அருளினல் போரால் உண்டாகும் பயத்தை நீக்குவார். ஆதரவுமாம்—கடைசிவரை ஆதரவாகவும் இருப்பார். (ஆகையால் சதா அவரையே நினைப்பாய் மனமே.)

# 5. குன்றுதோராடல்.

குன்றுதோருங் கூடுங் குகமடவார் கும்பமுலைக்
குன்றுதோருங் கூடிக் குலவியுயிர்—குன்றுதொரும்
போதுவந்து போற்றியருள் புண்ணியநின் பொற்
போதுவந்து போற்றினனிப் போது. [பாதப்

(பதவுரை.)

குன்றுதோறுங் கூடுங்குகா—மலைக்குன்றுகள் தோரும் சேர்ந்து காப்பவனே. மடவார் கும்ப முலைக்குன்று தொருங் கூடிக்குலவி—பெண்களின் குடம்போலும் உடைய தனங்களிற் சேர்ந்து (சிறு இன்பத்தை அநுபவிப்பதால்) உயிர் குன்று தோரும்போது—ஜீவனனது துன்பத்தையனுபவிக்கும் சமயம். வந்து—நேரில் வந்து. போற்றி—காப்பாற்றி அருள்—பாது காப்பாய், புண்ணிய—தரும சொரூபியே. நின் பொற்பாதப் போது — உன்னுடைய பொன் போன்ற பாத தாமரையை உவந்து—சந்தோஷத்துடன். போற்றினன் இப்போது—துதித்தேன் இந்தச்சமயம்.

# 6. பழமுதிர்சோலை.

தீம்பழமு திர்சோலைச் செவ்வேளே சேயேன்றன்
தீம்பழவி தித்தீது தீர்முருகா—பாம்பழகா
ராபரணத் தாக வரனுர்க் கருளிடல்போ
லாபரண மாகியெனை யாள்.

(பதவுரை.)

தீம்பழமுதிர்சோலைச் செவ்வேளே—தித்திப்பாகிய கனிகளுதிரும் பழமுதிர் சோலையில் இருக்கும் செம்மையாகிய வேளே. சேயேன்றன்—குழந்தையாகிய என்னுடைய தீப்பழவிதித்தீது தீர்—கெடுதலாகிய பழயவினைத்துன்பத்தைத்தீர்க்க வேண்டும், முருகா—(தெய்வத்தன்மை) இளமையுடையவனே பாம்பு அழகு ஆபாணத்து ஆக அரனுர்க்கு அருளிடல் போல்—பாம்பை அழகுடன் ஆபரணமாக உடம்பில் தரித்த சிவ பெருமானுக்கு பிரணவத்தை ஓதி அருளினதைப் போல் ஆபரணமாகி எனை ஆள் — ஆபரணத்தைப் போல் என்னை விடாது சேர்ந்து ஆட்கொள்வாய்,

முருகன் துணை.

## படைவீடாறுக்கும் நேரிசை வெண்பா.

1 ஏரகத்தில் வாழ்குருவே யென்றவுட னேவினைகள்
போரகத்தி யம்மென்றே போயொழியும்—சீரகத்தி
லேசேர்க்குஞ் சேராரே யேமபட ரோர்திருவி
லேசேர்க்குஞ் சேரா திடர்.

2 திருவாவி நன்குடியிற் சேர்குமரா வென்றால்
கருவாகுந் தீவினைகள் காணு—தருவாவி
வீறும் நவப்பழனி வேலவனென் றோதிடவே
பாறும் பவப்பிணிகள் பார்.

3 திருச்செந்தூர் மேவுஞ் சிலம்பனென் றூற்போம்
கருச்செந்தூர் மேவுங் கருமம்—திருச்செந்திற்
சென்றபவன் சேய்கடம்பா செவ்வேளே யென்றாலே
கன்றுபவந் தேய்ந்தறுமே காண்.

4 பழமுதிர்சோ லைக்கடம்பா பண்ணவர்தே வாமுப்
பழமுதிர்சொல் வேடமகள் பத்தா—அழமுதிர்வெங்
கண்டோன்று காலனுயிர் கைப்பற்று முன்னேயென்
கண்டோன்றிக் காக்கக் கடன்.

5 கல்லகமெல் லாநிறைந்த காங்கேயா வேடனென்றன்
இல்லகமெய் திட்டாலெற் கேற்றதுணைச்—சொல்லகநில்
லாதுவிட லாகுமத லிடர்க ளேதுப்வினை
யாதுதிட மாகவருளாய்.

6 பரங்கிரிச்செவ் வேள்கடம்பா பற்றார்வினைக்குத்
தரங்கிரிநீ யல்லாதி யார்சாற்றாய்—யுரங்கிரிக்கோ
டேன்றவராற் குக்குருவே யென்செயலெ லாமுனருட்
சான்றவசை வாதனுன்னித் தான்.



# படைவீடாறுக்கும் நேரிசை வெண்பா.

1 அல்லல் வினைதீரி வாசைத் திரயமற
வல்லல் கருவுய்க்கா வண்ணமே—நில்லாக்
குரங்கென்ற நெஞ்சேசகை கூப்பிப் பணிவாய்
பரங்குன்ற நாதன் பதம்.

2 காகாவென் காக்கை யினத்தைக் கரைதல்போல்
கூகூவென் பத்தர்களைக் கூவுவதால்—வாகாய்
தருச்செந்தி லாகும் சனன மொழியத்
திருச்செந்தி லாதிபனைச் சேர்.

3 துன்றும் படிமீதிற் சோர்ந்தே டணைதன்னைற்
கன்றும் படிக்கொன்றங் காட்டாதே—என்றனொரு
நாவிற் குடியாய் நடமிட்டு நற்பதத்தை
ஆவிற் குடியா யருள்,

4 ஓய்மனமே வீட்டுக் குறுதி யுரைக்கக்கேள்
காய்சினவேல் மாயூரக் கந்தனடிச்—சேய்மலராம்
சீரகத்தி லேசேரச் செய்வினையாம் பந்தமற
ஏரகத்து வேலவனை யேத்து.

5 சென்றுதெரி சிப்பார்க்குச் சேர்ந்திருக்கும் தீவினையை
நின்றுதறிப் போற்றுபவ னேமிதரிக்—கின்றவரிக்
கன்றுமரு கோனுன வாறுமுக மாமுருகோன்
குன்றுதொறு மாடுங் குகன்.

6 தென்றற்றே றாருமதத் தெவ்வையுந்தெற் கேமனையுங்
குன்றத்தே றுறுமுகக் கோமானே—பொன்றக்
கழலதிர்வீ ரச்சதங்கைக் காங்கேயா வேலா
பழமுதிர்சோ லைப்பரனே பண்.

முற்றிற்று.

குருவே துணை.

உ

முருகன் துணை.

# கந்தன் சித்திர பந்தன மாலைக்குப் புறநடை.

இணைக்குறளாசிரியப்பா.

கந்தன்சித்திர பந்தனக்கவியிற்
றந்தபுறநடை சாற்றக்கேண்மோ
ஆசிரியப்பா வானதிரண்டு
தேசத்தோர்புகழ் திருவெண்பாக்கள்
இருபானைந்தோ டியல்கொச்சகமும்
திரிபுயமகந் திகழ்மடக்கேகங்
கலித்துறைமூன்று கவிச்சந்தமொன்று
கலிக்கவியாறு காண்குறளிரண்டு
வஞ்சித்துறையும் வஞ்சிவிருத்தமும்
அஞ்சும்நான்கும் நிரை நிரையாகப்
பாவகையைந்து பத்துங்குகனுந்
தேவனைத்தொழுது செய்ததுவாமே.

முற்றும்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

முருகன் துணை,

சத்திவடிவேல் பிரஸ், கோயமுத்தூர்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| I | 20 | இழ்ந்துங் | இகழ்ந்துங் |
| II | 10 | கந்தனொருனாட் | கந்தனொருநாட் |
| | 17 | பயனுரும் | பயனுறும் |
| | 21 | ணோறறிவிற் | ணோரறிவிற் |
| III | 13 | மரிதலால் | மரிதால் |
| IV | 6 | குபுற்றபு | குயிற்றபு |
| V | 22 | துறைத்து | துரைத்து |
| VI | 11 | ணாட்க்கு | ணாட்கு |
| VIII | 13 | யுளவு | யுழவு |
| | 29 | வியப்யுற் | வியப்புற் |
| IX | 2 | கந்தப்புராணப் | கந்தபுராணப் |
| | 33 | ஏரன், பந்தனம் | ஏர்ப்பந்தனம் |
| X | 11 | சொல்வல்லான் | சொலவல்லான் |
| | 14 | தமியன் | தன்யன் |
| XI | 5 | தமிழ்பண்டி தரு | தமிழ்ப்பண்டி தரு |
| | 9 | அறுசீர்கழில | அறுசீர்க்கழில் |
| | 12 | மரவாச் | மறவாச் |
| | 24 | கவியொடு | கவியோடு |
| XII | 9 | மதுவூக்து | மதுவூற்று |
| | 21 | லாதவன் | லாவதன் |
| XIII | 5 | அரசியலார் | மிக்கேல் |
| XV | 8 | துடிசைக்கிளார் | துடிசைக்கிழார் |
| XVI | 22 | அவனாசி | அவிநாசி |
| XVIII | 10 | சீர்பெருங்குவளைத் | சீர்பெறுங்குவளைத் |
| | | தார்பெருந்தோவன் | தார்பெறுந்தோளன் |
| XIX | 8 | நாட்டை | நட்டபாடை |
| 2 | 6 | வளக்கேன் வாமருள் வந்து | வளச்சீர் வாமருள் வாய் வந்து |
| 3 | 11 | சண்டன | சண்டன் |

தொடர்ச்சி.

| | | | |
|---|---|---|---|
| | 30 | கொள்வார்களே | கொள்வார்கண் மெய் |
| 7 | 12 | சேருமுத்தே | ரேறுமுத்தே |
| 10 | 7 | யென்பாவே | வென்பாவே |
| 11 | 6 | எதியரை | எதிலரை |
| | 7 | முனிதவரை எந்து | முனிதவ ரைஎந்து |
| 16 | 5 | தாநீதானே | தாநிதானே |
| | 9 | ii தாய் - முதல்மை | ii தாய-முதனமையாய |
| 23 | 14 | நீதான் | நீதா தான் |
| 27 | 8 | தவராமல் | தவறாமல் |
| 28 | 2 | மற்ரொரு | மற்றொரு |
| 31 | 10 | மயூரா | மாயூரா |
| | 20 | கிருபையைக் கொடுக்க | கிருபையைக் கொடுக்க வாரா |
| | 22 | குன்றுதோராடி | குன்றுதோறாடி |
| 33 | 28 | ஆராமையே | ஆறாமையே |
| 34 | 5 | சாறுமுன் | சாருமுன் |
| | 9 | யேர்வயல் | சேர்வயல் |
| 37 | 13 | பெருவார்கள் | பெறுவார்கள் |
| 38 | 1 | திருவாவினங்குடி | திருவாவினன்குடி |
| | 18 | லாகபவ | லாகவப |
| 39 | 1 | குன்றுதோராடல் | குன்றுதோறாடல் |
| | 2 | குன்றுதோறுங் கூடுங் | குன்றுதொறுங் கூடுங் |
| | 3 | குன்றுதோருங்கூடிக் குன்றுதொரும் | குன்றுதொறுங்கூடிக் குன்றுதொறும் |
| | 7 | குன்றுதோறுங் கூடுங்குகா தோரும் | குன்றுதொறுங் கூடுங்குகா தோறும் |
| | 8 | தொருங் | தொறுங் |
| | 11 | தோரும்போது | தோறும்போது |
| 40 | 12 | திருச்செந்திற் | திருச்சந்திற் |